Registered No. M. 2330 'SIDDHANTHAM
Vol. 33—No. 6



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 33 | சார்வரி ஆனி 1960 ஜூன் | இதழ் 6

உள்ளுறை பக்கம்



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்
14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா

## செய்திச் சுருக்கங்கள்

**மெய்யுணர்வு விழா:** டாக்டர் குருசாமி முதலியார் உயர்நிலைப் பள்ளியில், 24-4-60 முதல் 7-5-60 வரை சிறப்புற நடைபெற்றது. ஆசிரியர் திரு. இளவழகனர் அவர்கள் ஒரு நாளைக்கு ஒரு சூத்திரமாகச் சிவஞான போதம் 12 சூத்திரங்களும் குறித்து விரிவுரைகள் நிகழ்த்தினர்கள். விழாத் தொடக்க நாளில் (24-4-60) இராவ்சாகிப் நல். முருகேச முதலியார் பி.எ., அவர்கள் தலைமை தாங்க, நமது சமாஜத் தலைவர் 'ருக்மணி குக்கர்' திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார் எம்.எ., அவர்கள் கொடியேற்றமும், திரு. ந. சங்கரன் எம்.எ.,எல்.டி., அவர்கள் வரவேற்புரையும், தவத்திரு. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் விழா மலர் வெளியிடும், திரு. கி. வா. ஜகந்நாதன், திரு. புலவர் முருகவேள் ஆகியோர் சொற்பொழிவுகளும், திரு. புலவர் மயிலை சிவமுத்து அவர்கள் நன்றியுரையும் வாழ்த்தும் நிகழ்த்தினர். 7-5-60 அன்று நிகழ்ந்த நிறைவு விழாவில் சைவப் பெரியார் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் வரவேற்புரையும், திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள் பாராட்டுரையும், தவத்திரு. குன்றக்குடி அடிகளார் வாழ்த்துரையும் வழங்கிச் சிறப்பித்தனர். ஆசிரியர் திரு. இளவழகனர் அவர்களின் 'சிவஞான போதம்' பற்றிய அரிய இனிய ஆராய்ச்சி விரிவுரைகளை, மிகப் பெருந்திரளான மக்கள் நாடோறும் கூடியிருந்து ஆர்வம் பெருகக் கேட்டுப் பயன் பெற்றமை குறிப்பிடற்பாலது.

**புரசைத் திருநெறிக்கழகம்:** 13-ஆம் ஆண்டு விழா, 13-4-60 புதன் மாலை கொண்டாடப் பெற்றது. "திருக்கோயில்" ஆசிரியர் திரு. ஜி. கல்யாணம் பிள்ளை எம்.எ. அவர்கள் விழாவைத் தொடங்கி வைத்தார்கள். திருவாளர்கள் எஸ். ஞானப்பிரகாச தேசிகர், மு. ந. மாசிலாமணி, இரா. கன்னியப்பன், தேமொழி ஆகியோர் சொற்பொழி வாற்றினர். செயலர் திரு. செ. சுந்தரனர் நன்றியுரை கூறினர்.

**மாதாந்தர வழிபாடு :** சென்னை தருமபுர ஆதின சமயப் பிரசார நிலையத்தின் சார்பில், ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தலைமையில் 1-5-60 ஞாயிறன்று, திரு இலம்பையங்கோட்டூரிலும், திருவிற்கோலத்திலும் நடைபெற்றது. திருவாளர்கள் : ச. சச்சிதானந்தம் பிள்ளை, எம். எ. சுப்பிரமணிய முதலியார், அ. சோமசுந்தரஞ்

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு

மலர் 33 | சார்வரி ஆனி 1960 ஜூன் | இதழ் 6

## ஞானப்பனுவல்*

(முருகவேள்)

முன்னுரை :

"ஞானப்பனுவல்" என்னும் தொடர் குமரகுருபர அடிகளால் சிதம்பர மும்மணிக்கோவை என்னும் நூலின்கண், மாணிக்கவாசகர் அருளிச் செய்த திருச்சிற்றம்பலக் கோவையார் என்னும் நூலினைக் குறிப்பிடும் வகையில் வழங்கப்பெற்றுள்ளது. எனினும், 'ஏற்புழிக் கோடல்'என்னும், உத்தி பற்றி, இத்தொடர் ஈண்டுப்பொதுவாக நமது சைவத் திருமுறைகள் பன்னிரண்டனையும் குறிப்பதாகக் கொள்ளலாம்.

மொழியும் பண்பும் :

உலகில் எத்துணையோ பலப்பல மொழிகள் வழங்கி வருகின்றன. அவைகளுள் ஒருசில மொழிகள் ஒவ்வொரு சிறப்பியல்பைப் பெற்றுச் சிறந்தினிது திகழ்கின்றன. "ஆங்கில மொழியின் வாயிலாக ஒருவரையும் அடிமை உணர்வு கொள்ளச் செய்தல் இயலாது"1 என்பது எட்மண்ட் பர்க் என்னும் பெருநாவலர் புகன்ற புகழோங்கிய கூற்றாகும். ஆங்கில மொழியின்கண் இயல்பாகவே உரிமையுணர்வு ஊடுருவிக் கலந்து நிற்கின்றது என்பதனையே அவர் அங்ஙனம் வற்புறுத்தினார்.

---

*பூவாளூர்ச் சைவ சித்தாந்த சபையின் பொன் விழாவில் (29-4-60) நிகழ்த்திய சொற்பொழிவினைத் தழுவியது.

1. "You cannot argue a man into slavery through the English language"—*Edmund Burke*.

மொழிநூற் கலைஞரும் பிரெஞ்சுக்காரரும் ஆகிய ஜே. வெண்ட்ரியே என்னும் பேரறிஞர், "பெண்பாலாரோடு தொடர்புடைய சொற்களில் தகவற்ற அல்லது இழிந்த எண்ணங்களைத் தயக்கமின்றி விரைந்து இணைக்துக் காணப் பிரெஞ்சுக்காரர்கள் முற்படுகின்றனர்"[2] எனக் கூறுகின்றார். ஐந்தாம் சார்லஸ் என்னும் பேரரசர் "யான் எனது குதிரைகளிடம் ஜெர்மன் மொழியையும், கடவுளிடம் ஸ்பானிஷ் மொழியையும், நண்பர்களிடம் பிரெஞ்சு மொழியையும், காதலியரிடம் இத்தாலிய மொழியையும் பேசுவேன்"[3] என மொழிந்ததாகக் கூறப்படும் செய்தியானது ஒரு சில மொழிகளில் ஒவ்வொரு சிறப்பியல்பு வீறுற்று விளங்கித் திகழ்தலை வற்புறுத்துவதாகும். இவ்வுண்மையின் அடிப்படையில் ஆராய்ந்துணர்ந்த பேரறிஞர் ஒருவர் "சட்டத்திற்கு இலத்தின் மொழியும், சால்பறத்திற்கு ஈபுருவ மொழியும், தத்துவ ஆராய்ச்சிக்குச் சம்ஸ்கிருத மொழியும், அறிவியலுக்கு ஆங்கிலம், ஜெர்மன், பிரெஞ்சு மொழிகளும் போல, இறையருள் இன்ப நுகர்வின் கவிதைகளுக்குத் தமிழ் மொழியானது சிறப்பு வாய்ந்ததாகும்" எனக் குறிப்பிடுகின்றார்.

சட்டத்தில் லத்தீனம், சால்பறத்தில் ஈபுருவம்,
தட்பமிகு தத்துவத்தில் சம்ஸ்கிருதம்,—நுட்பமிக
ஆன்ற அறிவியலில் ஆங்கிலம், ஜெர் மன், பிரெஞ்ச்போல்
சான்றஇறை மாண்பில் தமிழ்.

இக்கருத்தினையே மேலும் வற்புறுத்தும் முறையில் நடுவுநிலை நன்னெறிச் சான்றாண்மையாளராகிய அருட்டிரு இராமலிங்க அடிகளார், "இடம்பத்தையும் ஆரவாரத்தையும் பிரயாசத்தையும் பெருமறைப்பையும் போதுபோக்கை

---

2. The Frenchman readily attaches indecent or obscene ideas to words relating to the fair sex" —*J. Vendreyes*.

3. There seems to be a germ of truth in the well-known saying of the Emperor Charles V, that he would use German to his horses, Spanish to his God, French to his friends and Italian to his mistresses"—*Taraforewalla*.

யும் உண்டுபண்ணுகின்ற ஆரியம் முதலிய பாஷைகளில் எனக்கு ஆசை செல்லவொட்டாது, பயிலுதற்கும் அறிதற்கும் மிகவும் லேசுடையதாய், பாடுதற்கும் துதித்தற்கும் மிகவும் இனிமை உடையதாய், சாகாக் கல்வியை லேசில் அளிப்பதாய்த் திருவருள் வலத்தாற்கிடைத்த தென்மொழி ஒன்றனிடத்தே மனம் பற்றச் செய்து, அத்தென் மொழியால் பலவகைத் தோத்திரப் பாட்டுகளைப் பாடுவித்தருளினீர்" என இறைவன் தமக்குச் செய்தருளிய பேருதவியை நினைந்து வழுத்தியிருத்தலும் ஈண்டு நம்மனோர் நினைவு கூரற்பாலது. 'தமிழ் மொழியானது தன்னை முறையாக நன்றினிது பயின்றுணர்வோர்க்குச் சிறந்த பல பண்புகளை விளைத்தருளுகின்றது' என்னும் உண்மை, "அதூஉம் சாலும் நற்றமிழ் முழுதறிதல்" என வரும் மோசிகீரனார்[50] புறநானூற்றுப் பாடலாலும் செவ்விதில் தெளியப்படுகின்றது. தமிழ் மொழியினை 'ஞானத் தமிழ்' எனச் சான்றோர்கள் பலர் போற்றியுள்ளனர். ஆசிரியர் சேக்கிழார் பெருமான் "ஞாலம் அளந்த மேன்மைத் தெய்வத் தமிழ்" எனப் போற்றிப் புகழ்ந்துள்ளார்.

மொழிகள் பலப்பலதாம் மூதுலகில் உண்டு!
இழிவின் றவையுயர்ந்த வேனும்—விழுமியநம்
செந்தமிழ்போல் தெய்வத் திறம்சிறந்த சீர்த்தி,மற்றை
எந்த மொழிக்குமில்லை ஈண்டு!

நம்மருமைச் செந்தமிழின் நல்லமைப்பை ஆராய்ந்தால்
செம்மைமிகு சீர்ச்சைவ சித்தாந்த - மெய்ம்மைகள்தாம்
எல்லாம் பொதிந்தொளிர்தல், யாரும் இனிதுணர்ந்து
நல்லோராய் வாழ்வர் நயந்து!

திருமுறைகள் :

இத்தகைய பெருஞ் சிறப்பு வாய்ந்த நம்மருமைத் தமிழ் மொழிக்கு அழியாப் பெருங் கலைக் கருவூலமாகத் திகழ்வன நமது சைவத் திருமுறைகள். 'ஞானப்பனுவல்கள்' என நவிலத்தக்க நமது சைவத் திருமுறைகளின் அருமை பெருமைகள் அளவிடற்பாலன அல்ல. "இங்கிலாந்து நாடானது இத்துணைப் பெருமை பெற்றிருப்பது வேறு பிறிதெதனாலும்

அன்று, தனது கவிதைகளினாலேயேயாகும் "[4] என மேத்யூ ஆர்னல்ட் என்னும் ஆங்கிலப் பேரறிஞர் கூறியது, நமது தமிழ் நாட்டுக்கும் தமிழ் மொழிக்குமே பெரிதும் பொருந்துவதாகும் எனலாம். இடைக்காலத்தில் தமிழகத்திற்கு நேர்ந்த எத்துணையோ பல இடுக்கண்களை அகற்றி, நமது பழந்தமிழகப் பண்பாடுகளை அழிந்துபடாமல் காத்தளித்து வளர்த்துப் போற்றிய பெருமைக்குரியன திருமுறை இலக்கியங்களே யாகும். அவற்றைத் தமிழ் நாட்டின் 'மறுமலர்ச்சி நூல்கள்' அல்லது 'புத்துயிர்ப்பிலக்கியங்கள்' எனக் கட்டுரைக்கலாம். டாக்டர் ஜி. யூ. போப், சர். ஜார்ஜ் எலியட், டாக்டர் பார்னெட் போன்ற மேல்நாட்டறிஞர்கள் பலர், நமது திருமுறைகளின் அருமை பெருமைகளை வியந்து மகிழ்ந்து பாராட்டியுரைத்துள்ளனர். சிறந்த கவிஞரெனத் தேர்ந்து நோபெல் பரிசு வழங்கப் பெற்றவரும், உலகப் புகழெய்திய பேரறிஞருமாகிய இரவீந்திரநாத தாகூர் அவர்கள், தென்னாட்டில் சுற்றுப் பயணம் செய்தபோது,

" மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே."

" விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட்டு உணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே."

" என்னில் ஆரும் எனக்கினி யார்இலை
என்னி லும்இனி யான்ஒரு வன்உளன்
என்னு ளேஉயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்கு
என்னு ளேநிற்கும் இன்னம்பர் ஈசனே."

" கனியினும் கட்டி பட்ட கரும்பினும்
பனிமலர்க்குழற் பாவைநல் லாரினும்
தனிமுடி கவித்து ஆளும் அரசினும்
இனியன் தன்அடைந் தார்க்கிடை மருதனே."

---

4. " By nothing is England so glorious, as by her poetry "—*Matthew Arnold.*

என்பன போன்ற திருமுறைப் பாடல்களின் பொருள் நுட்பங்களைத் தம் வாயிலாகக் கூறக்கேட்டுப் பெரு வியப்பும் விம்மிதமும் அடைந்து, "இத்தகைய தெய்விக நலம் செறிந்த அரிய இனிய கவிதைகளைத் தாய் மொழியின் மூலமாகவே இயல்பாகப் படித்தும் பாடியும் மகிழ்வதற்குத் தமிழர்களாகிய நீங்கள் பெரிதும் கொடுத்துவைத்தவர்களாக இருக்கின்றீர்கள். இத்தகைய அருட் கவிதைகளைப் படித்துணர்ந்து பாடி மகிழ்ந்து நலம் பெறுதற்கு அடுத்த பிறவியிலாதல் யான் தமிழனாகப் பிறக்க விரும்புகின்றேன்" எனக் கண்கள் நீர் மல்கக் கசிந்து கூறியதாகத் தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்கள் சென்னை புரசையில் நிகழ்ந்ததொரு கூட்டத்தில் குறிப்பிட்டார்கள். இன்னோரன்ன செய்திகள் திருமுறைகளின் ஒப்புயர்வற்ற சிறப்புக்களை விளக்குவனவாகும்.

திருமுறை நூல்களின் தெய்வநலஞ் சான்ற
பெருமைகள்தாம் எல்லையிலாப் பெற்றி(து)—அருமைமிகும்
நல்ல மறுமலர்ச்சி நூல்கள்என நாம்அவற்றைச்
சொல்லலாம் உண்மை துணிந்து.

இயற்கைஎழிற் கின்புறுதல், வாழ்வியலைத் தேர்தல்,
மயற்கையறும் மெய்யுணர்வு வானில்--உயர்ச்சியுறல்,
நல்லொழுக்கில் நின்றருளை நாடல், உடையவர்கட்(கு)
இல்லை திருமுறைபோல் இன்பு!

மனக்கவலை மாற்றும் மருந்தாகும்! எல்லா
நினைப்பரிய தீங்குகளும் நீக்கும்!—தனக்கிணையில்
தெய்வத் திருமுறைநற் செந்தமிழ் நூல்களைப்போல்,
வையத் துயர்ந்தன இல் மற்று!

கலைநிரம்பிக் கற்றற் கினிதாய், அறிவின்
நலம்நிரம்பிச் சொற்பொருள்கள்நன்றாய்,—விலைவரம்பின்(று)
உள்ளுதொறும் உள்ளுதொறும் உள்ளம் உவப்பிக்கும்
தெள்ளு திருமுறைநூற் சீர்!

திருமுறை இலக்கியங்களை நாம் எத்தனையோபலவகைகளில் ஆராய்தல் வேண்டும். "கண்ணுதல் கருணை வெள்ளம் ஆயிர முகத்தாற் கண்டார்" எனச் சேக்கிழார்பெருமான் கூறியருளுதல் போல, ஞானப்பனுவல்களாகிய திருமுறைகளை நாமும் நமக்கியன்ற பெற்றியில் 'ஆயிரமுகத்தாற் காண்டல்'

வேண்டும். "மொழிக்கு மொழி தித்திப்பாக மூவர் சொலுந் தமிழ்" எனத் தாயுமான அடிகளார் ஞானப்பனுவல்களாய நமது சைவத் திருமுறைகளைப் பெரிதும் மிகப் போற்றிப் புகழ்ந்துள்ளார்......காலையில் ஈண்டுத் "திருக்குறட் கடவுள் வாழ்த்து"ப் பற்றி விரிவாக விளக்கப்பெற்றது. அதுபோது நினைவுக்கு வந்ததொரு கருத்தை மட்டும், இதுபோது சொல்லி என் உரையை முடித்தலமையுமெனக் கருதுகின்றேன்!

திருநாவுக்கரசரின் ஒரு திருத்தாண்டகம்:

இந்நாளில் பல்வேறு இதழ்களிலும் சிறுகதை, தொடர் கதை, புதினக்கதை, காதற்கதை எனப் பல கதைகள் வெளி வருவதைக் காண்கின்றோம். நமது திருநாவுக்கரசர் பெருமானும் ஒரு சிறு கதை எழுத்தாளர் நிலையில் அந்நாளில் விளங்கியிருந்திருப்பார் போலும்! அவர்தாமும் இந்நாளைய எழுத்தாளர்களைப் போலவே ஒரு காதற் கதையை—சிறு கதையை—நமக்கு எழுதிக் காட்டுகின்றார்: ஓர் ஊரில் ஒரு செல்வக் குடும்பத்தில் ஒரு பெண் பிறந்தாள். தாய் தந்தையரால் அவள் பெரிதும் பேணி வளர்க்கப் பெற்றாள். தக்க பருவமுற்றாள். பெற்றோர் அவட்குத் திருமணம் செய்து வைக்கும் முயற்சியில் தலைப்பட்டனர். தக்கவன் ஒரு நம்பிக்குத் தம் நங்கையைக் கொடுக்கத் தாய்தந்தையர்கள் உறவினருடன் குணம்பேசிக் குலம்பேசித் திருமணத்திற்கு ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தனர். அத்திருமணப் பேச்சின் விவரங்களை யெல்லாம் அப்போதைக்கப்போது தோழியின் வாயிலாக மணமகள் அறிந்து மகிழ்ந்து கொண்டிருந்தாள். தோழியின் வாயிலாக மணமகள் தன்னை மணக்கப் போகும் ஆடவனின் பெயரை முதலிற் கேட்டறிந்து கொண்டாள். பின்னர் அவனது வடிவழகும் குண நலன்களும் இவ்விப் பெற்றியவை என உசாவி உசாவித் தெரிந்து கொண்டாள். இதற்கும் பின்னர் அவனது ஊர் யாதெனவும் வினவி உணர்ந்து கொண்டாள். இவையனைத்தும் அவளுக்குப் பெரிதும் மன நிறைவை அளிக்கும் வகையிலேயே மேலும் மேலும் அமைந்தன. ஆதலின், அத்தனை அரிய பெரிய சிறப்புக்கள் அமைந்த அவ் ஆண்மகனையே மணந்து கொள்வ

தென உறவினருடன் தாமும் உளமொத்திசைந்தாள்; உறுதி பூண்டாள். ஒருகணமும் ஊழியாகும் நிலையில் திருமணம் நிகழவிருக்கும் நாளை ஆவலுடன் எதிர்நோக்கி நின்றாள். திருமணம் சிறப்புற நிகழ்ந்தது. பின்னர்ப் பிறந்தகம் விட்டுப் பெயர்ந்து புகுந்தகம் செல்லவேண்டிய நாள் போந்தது. தன்னை வளர்த்த அன்னையையும் தந்தையையும் மறந்தாள். நென்னல் வந்த தலைவனுடன் இயைந்து விரைந்து சென்றாள். இல்லிகவாப் பருவத்தில் தனக்கு விதிக்கப் பெற்றிருந்த உலகியற் கட்டுப்பாடுகளை யெல்லாம் துறந்தாள். தன்னலம் மறந்தாள். கணவன் நலமே கருதிவாழ முற்பட்டாள். வாழ்விலும் தாழ்விலும் இன்பிலும் துன்பிலும் கணவனின் திருவடிகளையே புகலிடமாகக் கொண்டு அவனுடன் பிரிவற இயைந்து ஒன்றி நின்று இன்புற்று வாழ்ந்து வந்தாள்...... என்பது, திருநாவுக்கரசர் நமக்காக எழுதி வெளியிட்ட அழகியதொரு சிறு கதை.

"முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்!
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்!
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்!
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்!
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்!
அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தை!
தன்னை மறந்தாள்! தன்நாமம் கெட்டாள்!
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே!"

எனவரும் அனைவரும் அறிந்த திருப்பாடலில், இச் சிறுகதை அமைந்துள்ளது. 'ஒரு முறை கேட்ட அளவிலேயே உள்ளம் கொள்ளை கொள்வதே சிறந்த கவிதையாகும்' என்பர் அறிஞர்கள். அதற்கேற்ப, முதன்முறையாகக் கேட்ட மாத்திரையே எவருள்ளத்தையும் கொள்ளை கொண்டுவிடும் ஆற்றலும் அழகும் மிக்க இச்திருப்பாடலின் சிறப்பை, எம் ஒரு நாவாற் கூறல் ஒல்லுமோ?

"சேமமிகும் திருவாத வூர்த்தேவென் றுலகுபுகழ்
மாமணியே! நீஉரைத்த வாசகத்தை எண்ணுதொறும்,
காமமிகு காதலன்தன் கலவிதனைக் கருதுகின்ற
ஏமமுறு கற்புடையாள் இன்பினும்இன் பெய்துவதே!"

என இராமலிங்க அடிகளார் பாடி யருளியவாறு போல, காதலுணர்வின் வயப்பட்ட ஒரு கன்னிப் பெண்ணின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை மட்டுமேயன்றிக் கடவுளுணர்வு தலைப்பட்ட அடியவர்களின் உள நெகிழ்ச்சி அனுபவங்களை யும் இப்பாடல் குறிப்பிடுதல் காணலாம்.

காதலரும், கடவுள் அடியவரும்:

தனது காதற்குரியவரின் பெயர்கேட்டு மகிழ்தல் காதலர் களுக்கியல்பு. அங்ஙனமே தாம் வழிபடும் கடவுளின் திருப் பெயர் கேட்டலில் அடியார்கட்குப் பெருமகிழ்வு. " சிவ னெனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி யம்மான் " " சிவனெனும் ஓசை அல்லது அறையோ உலகில் திருநின்ற செம்மை உளதே ?" " அரும்பெறல் மரபில் பெரும் பெயர் முருகன் " எனச் சான்றோர்கள் தம் வழிபடு கடவுளரின் திருப் பெயரில் தமது ஈடுபாட்டினைப் புலப்படுத்தியுள்ளமை காணலாம்.

" பேர்பரவை பெண்மையினிற் பெரும்பரவை விரும்பல்கு
லார்பரவை அணிதிகழும் மணிமுறுவல் அரும்பரவை
சீர்பரவை ஆயினாள் திருவுருவின் மென்சாயல்
ஏர்பரவை இடைப்பட்ட என்ஆசை எழுபரவை "

" அரக்கனே ஆக!வேறோர் அமரனேஆக! அன்றிக்
குரக்கினத் தொருவனேதான் ஆகுக! கொடுமைஆக!
இரக்கமே ஆக!வந்திங்கு எம்பிரான் நாமம்சொல்லி [டோ"
உருக்கினன் உணர்வை! தந்தான் உயிர்! இதின்உதவியுண்

" சிறையாரும் மடக்கிளியே! இங்கேவா! தேனொடுபால்
முறைபாலே உணத்தருவேன்! மொய்பவளத் தொடுதரளம்
துறையாரும் கடற்றோணி புரத்தீசன், துளங்கும்இளம்
பிறையாளன் திருநாமம் எனக்கொருகாற் பேசாயே!"

எனவரும் பாடல்களும் இவ்வுண்மையை வலியுறுத்தும். தமது காதற்குரியாரின் வடிவழகும் குணவழகும் நினைந்தும் கேட்டும் இன்புறுதல் காதலர்கட் கியற்கை. அங்ஙனமே தம் வழிபடும் கடவுளின் திருவுருவ நலங்களிலும் அருளிச் செயல்களிலும் அடியார்கட்குப் பேரீடுபாடு நிகழும். " வடி

வேறு திரிசூலம் தோன்றும் தோன்றும் '' என்பன போன்று வரும் பதிகங்கள் இதன் உண்மை தேற்றும். தம்மால் விரும்பப் படுபவரின் ஊர்கேட்டு உணர்ந்துவப்புறுதல் காதலர்தம் செயல். அவ்வாறே தம் வழிபடு கடவுளரின் தல விசேடங்களை அறிந்துகொள்ள விரும்புதல் அடியவர் பண்பு. " ஒருவனாய் உலகேத்த நின்றநாளோ ? ஓருருவே மூவுருவம் ஆனநாளோ ?........ திருவாரூர் கோயிலாக் கொண்டநாளோ'' என்பன போன்றுவரும் திருப்பதிகங்கள் இதற்குச் சான்றுபகரும். ஊரும் பேரும் உருவும் சிறப்புடைமை தெளிந்ததற்பின், அனைய சிறப்பினவையே மணந்து கொள்வேன் என உறுதி கடைப்பிடித்துப் பித்துற்று நிற்றல் காதலர்கள் நெறி. " உத்தமன் அத்தன் உடையான் அடியே நினைந்துருகி மத்த மனத்தொடும் மால் இவனென்ன மன நினைவில் ஒத்தன ஒத்தன சொல்லிட ஊரூர் திரிந்து எவரும் தத்தம் மனத்தன பேசத்'' தம்வயம் இழந்து பித்தாயொழுகுதல் அடியவர்களின் பண்பு.

> " இறந்த கற்பினாட்கு எவ்வம் படரன்மின்!
> சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்!
> அறந்தலைப் பிரியா ஆறுமற் றதுவே!''

என்றதற்கேற்ப, எத்துணையோ பாடுபட்டுத் தம்மை இனிது வளர்த்த தாய் தந்தையரைப் பிரிந்து, தம்மை மணந்து கொண்டவர் பின்னே செல்லுதல் மணமக்கள் வழக்கம். அங்ஙனமே கடவுளுணர்வு தலைப்பட்ட அடியவர்கள், தம்மொடு பல்காலமாகப் பயின்று தாயும்தந்தையும் போலும் பொறிபுலன் கரணங்களையெல்லாம் நீத்துத் தாம் காதலித்த கடவுட் செம்பொருளையே தேடிப் பின்பற்றிச்சென்று கண்டு நலம்பெறும் இயல்புடையர். " நிறை யெனப்படுவது மறை பிறர் அறியாமை '' எனும் அகலிடத்தார் ஆசாரம் காத்து ஒழுகினோர், இல்லற வாழ்வில் அதனைச் சிறிது தவிர்ந்தொழுகுவர். அங்ஙனமே, கடவுளுணர்வு கைகூடிய ஞானிகளும் "தேசம் இடம், காலம், திக்கு, ஆசனங்களின்றிச் செய்வது ஒன்றுபோற் செய்யாச் செயலதனைச் செய்து பாலருடன் உன்மத்தர், பசாசர் குணம் மருவிப் பாடலினொடு

ஆடலிவை பயின்று" "உலகியற் பகையார்" எனும் நிலையில் அகலிடத்தார் ஆசாரத்தை அகன்று நிற்பர்.

"வண்ணச் சீறடி மண்மகள் அறிந்திலள்
கடுங்கதிர் வெம்மையிற் காதலன் தனக்கு
நடுங்கு துயர்கூர நாப்புலர வாடித்
தன் துயர் காணாத் தகைசால் பூங்கொடி"

எனச் சிலப்பதிகாரம் கூறுவதுபோல, தன்னலம் மறத்தல் காதலர்க்கியல்பு. "எனை நானென்பது அறியேன், பகல் இரவாவது மறியேன்" "என்னை மறந்திருந்தேன் இறந்தே விட்டது இவ்வுடம்பே" "ஊன் கெட்டு உயிர்கெட்டு உணர்வுகெட்டு என் உள்ளமும்போய் நான் கெட்டவா பாடித் தெள்ளேணம் கொட்டாமோ" "நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே" "ஆயக்கடவேன் நானோதான்? என்னதோ இங்கு அதிகாரம்? காயத்திடுவாய் நின்கழற்கீழ் வைப்பாய் கண்ணுதலே" என்றெல்லாம் அருளும் நிலையில் வைகுதல் ஞானிகள் நிலை. திருமணத்திற்கு முன் இன்னார் மகளெனவும், அதன் பின்னர் இன்னார் மனைவியெனவும் பெண்கள் பெயர் பெறுதல் உலகியற்கை. அங்ஙனமே கடவுளுணர்வு தலைப்படுமுன் செட்டியார், முதலியார் என்பனபோன்ற பெயர்கள் பெற்றிருந்து, கடவுளுணர்வு தலைப்பட்ட பின்னர்ப் பண்டைக்குலம் ஒழிந்து தொண்டக் குலத்தினராகிப் பக்தர், சித்தர், அன்பர், அடியார் முதலிய பெயர்பெறுதல், அருளாளர் பண்பு. இன்பினும் துன்பினும், வாழ்விலும் தாழ்விலும் கணவனின் திருவடிகளையே புகலிடமாகக் கொண்டு கற்புடை மகளிர் ஒழுகுவர். அவ்வாறே ஞானிகளும் "இடரினும் தளரினும் எனதுறு நோய் தொடரினும் உனகழல் தொழு தெழுவேன்" எனும் நிலையில் இறைவன்தாளே தலைப்பட்டு நிற்பர்....இன்னோரனைய உண்மைகள் எத்துணையோ பலப்பல இனிதமைந்து விளங்கும் வண்ணம் திருநாவுக்கரசர் பெருமான் எழுதிக் காட்டிய இச்சிறு கதைத் திருப்பாடல் எத்துணைச் சிறந்ததொன்றாகத் திகழ்கின்றது பார்மின்கள்! திருமுறைகளின் சிறப்பை யுணர்த்தற்கு இவ்வொரு திருப்பாடலே அமையாதோ? "இதனளவு உண்டு கோள் மதிவல்லோர்க்கே."

திருக்குறளும் திருத்தாண்டகமும்:

இனி ஈண்டு இப்பாடலில் முதன்மையாகக் கருதக் தகுவது ஒன்றுள்ளது. இவ்வழகிய இனிய பாடல், ஆசிரியர் திருவள்ளுவர் தமது திருக்குறளின்கண் கடவுள் வாழ்த்தாகக் கூறிய பத்துக் குறள்களையும் தன்னுள்ளடக்கிக்கொண்டு, அவற்றின் தெளிவார்ந்த தீம்பிழிச் சாரமாக, அத்திருக்குறளினும் மிகச் சுருக்கமும் இலக்கியச் சுவையும்வாய்ந்து திகழ்கின்றது எனலாம். திருவள்ளுவர் 'ஆதிபகவன்' எனக் குறித்ததனையே நாவுக்கரசர் பெருமான் 'அவனுடைய நாமம்' என்கின்றார். வாலறிவன் என்றதனை "மூர்த்தியவனிருக்கும் வண்ணம்" என விளக்குகின்றார். மலர்மிசை ஏகினான் என்பதே அவனுடைய 'ஆரூர்' எனப்பட்டது. இறைவன் பொருள்சேர் புகழ் புரிதல் "அவனுக்கே பிச்சியாதல்" எனக் குறிப்பிடப்படுவதாயிற்று. வேண்டுதல் வேண்டாமை இலாமை என்பதும் பொறிவாயில் ஐந்தவித்தல் என்பதும், 'அன்னையையும் அத்தனையும் நீத்தலாக' உருவகம் செய்யப்பட்டன. தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்து மனக்கவலை மாற்றலே 'அகலிடத்தார் ஆசாரம் அகலுதல்' ஆயிற்று. பொருளும் புகழும் போகமுமாகிய பிறவாழி நீத்தலே 'தன்னை மறத்தல்' எனவும், எண்குணத்தான் தாளை வணங்கிப் பசு கரணங்கள் பதிகரணங்களாக மாறப்பெறுதலும் பிறவுமே 'தன்நாமம் கெடுதல்' எனவும், பிறவிப் பெருங்கடல் நீந்தி இறைவனடி சேர்தலே 'தலைவன்தாள் தலைப்படுதல்' எனவும் திருவள்ளுவரின் அடியொற்றித் திருநாவுக்கரசரால் குறிப்பிடப்பெற்றன......

முடிவுரை:

திருக்குறள் போன்ற நூல்களை ஆராய்ந்து உணர்தற்கும் திருமுறைகள் பயன்படுதல் இதனால் நன்கினிது தெளியப்படும். 'திருக்குறட் கடவுள் வாழ்த்து ஆசிரியர் திருவள்ளுவர் இயற்றியதன்று' என ஒரு சிலர் கூறுவது உண்மையாகாதென்பதும், திருக்குறள் சைவசித்தாந்த முழுமுதல் நூலேயாகும் என்பதும் பிறவும், இவ்வாற்றால் யாவரும் தெளிய உணரலாம்.

---

# அபிராமி அந்தாதியின் முதற் பாடல்

[வே. ப. சண்முக முதலியார், திருமலைராயன்பட்டினம்]

'உதிக்கின்ற செங்கதிர் உச்சித் திலகம் உணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்கம் மாதுளம் போது மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடி மென்கடிக் குங்கும தோயமென்ன
விதிக்கின்ற மேனி அபிராமி என்றன் விழுத்துணையே."

இது திருக்கடவூர் அபிராமி அம்மன் மீது அபிராமி பட்டர் பாடிய அபிராமி அந்தாதியின் முதற்பாடல். இப் பாடலுக்குப் பலர் பலவிதத்தில் பொருள் கண்டிருக்கின்றனர். முதல் வரியில் உள்ள "உதிக்கின்ற செங்கதிர் உச்சித் திலகம்" என்ற தொடருக்குப் பொருள் கொள்வதில் தான் கருத்து வேறுபாடு நிரம்ப உள்ளது.

இதற்கு முன் எழுதிய உரையாசிரியர்கள் எல்லோரும் "உச்சித் திலகம்" என்று தனித்துக்கொண்டு வேறு வேறு உரை கண்டுள்ளனர். அவ்வாறு "உச்சித்திலகம்" என்பதைத் தனியாகக் கொள்ளாது "உச்சித்திலகம் உதிக்கின்ற செங்கதிர்" என்று கொண்டு கூட்டி, உச்சிக்குத் திலகமாகிய உதிக்கின்ற செங்கதிர் என்று பொருள் கொண்டால், அது ஆசிரியரின் உண்மையான உள்ளத்தை அறிய முற்படும் செயலாகும்.

ஆதலால் "உச்சித்திலகம்" என்று தனித்துக் கொண்டு இடர்ப்படுவதைவிட இவ்வாறு சிறிது மாற்றிப் பொருள் கொண்டு பார்த்தால் "வானிற்குத் திலகமாகிய உதிக்கின்ற செங்கதிரோனைப் போன்ற திருமேனியை உடையவள் அம்மை" என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெள்ளிதின் புலனாகும்.

காரைக்கால் அம்மையார் தமது அற்புதத் திருவந்தாதியில் சிவபெருமானின் தோற்றத்தை இயற்கைக் காட்சி கொண்டு விளக்கிச் சொல்லும் பாடல்,

" காலையே போன்றிலங்கும் மேனி கடும்பகலில்
வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு—மாலையின்
தாங்குருவே போலுஞ் சடைக்கற்றை மற்றவற்கு
வீங்கிருளே போலு மிடறு"

என்ற 65-ம் பாடலாகும்.

இப்பாடலில் புனிதவதியார் இறைவன் திருமேனியைக் காலை இளஞ்சூரியனுடன் உவமித்திருப்பதும், அபிராமி பட்டர் அம்மையின் திருமேனியைக் காலைக் கதிரவனோடு உவமித்திருப்பதும் ஒப்புநோக்கிச் சிந்திக்கத்தக்கது.

நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற்றுப் படையிலும் முருகன் தோற்றத்தை வருணிக்கப் புகும்போது கீழ்கடலில் உதயஞ் செய்யும் பரிதியையே உவமையாகக் கொள்கிறார் என்பது,

“ உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி ”

என்ற தொடரால் தெரியவருகிறது.

ஆகையால் பண்டைய நூலாசிரியர்கள் எல்லோரும் சிவபெருமான், முருகன் முதலிய கடவுளர்களின் சிவந்த திருமேனியைக் காலைக் கதிரவனுடன் உவமித்திருப்பதால் ஆசிரியர் அபிராமி பட்டரும் அம்மையின் திருமேனியை “உச்சிக்குத் திலகமாகிய உதிக்கின்ற கதிரவனோடு” ஒப்பிட்டிருப்பது இயல்பே என்பது போதரும்.

---

# வன் பராய் முருடு

[திரு. மு. அருணாசலம், எம்.ஏ.]

சில ஆண்டுகளுக்குமுன் என்னுடைய சொந்த நிலத்தில் காம்பு அழித்துச் சாகுபடி வேலை செய்துகொண்டிருந்தேன். சில காட்டுமரங்களை, வேலைசெய்த ஆட்கள் வெட்டி அப்புறப்படுத்தினார்கள். அவற்றுள் ஒருமரம் எனக்குத் தெரியாத பெயர்: “பொரா” என்று ஆட்கள் பெயர் சொன்னார்கள். அப்படி ஒருமரம் என்று எண்ணிக்கொண்டேன். வெள்ளையான மரம். அதிக வளர்ச்சியின்றிக் கெட்டியாகப் பருத்திருந்தது. ஓர் அங்குலம்கூட பாக்கி இல்லாதபடி முண்டும் முடிச்சுமாக இருந்தது. மரங்களை எல்லாம் ஒரு பக்கமாக அடுக்கிவைத்திருந்தார்கள்.

சில மாதங்கள் சென்ற பிறகு, விறகு உடைக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. கிழவனான ஓர் ஆள் வந்தான். அவனை உடைக்கச் சொன்னேன். அவன், அடுக்கிவைத்த பொரா மரங்களை ஒதுக்கிவைத்துவிட்டு, மற்ற மரங்களை மட்டும் உடைத்தான்.

"ஏன் இந்தப் பொராங்கட்டையை உடைக்கவில்லை ?" என்று கேட்டேன்.

அவன் சிரித்தான். "இந்தப் பொராங்கட்டை எல்லாம் முருடு. கோடாலிக்கு அசையாது. கோடாலிவாய் தெறிக்குமே தவிர மனிதனால் இதை உடைக்க முடியாது" என்று சொன்னான்.

"இவற்றை என்ன செய்வது ?"

"அப்படியே முழுசாகச் செங்கல் காளவாயில் போட்டு விடுவதுதான் பழக்கம்" என்றான்.

* * * *

கனவு கண்டதுபோல் எனக்குத் திருவாசக வரி ஒன்று ஞாபகம் வந்தது :

" வன்பராய் முருடு ஒக்கும் என்சிந்தை
மரக்கண் என்செவி இரும்பினும் வலிது "

என்று மாணிக்கவாசகர் தம்மை நொந்து கொள்ளுகிறார். (செத்திலாப்பத்து, 4-ஆம் பாடல்)

நெகிழாத நெஞ்சம் என்று கூறுபவர், "வன் பராய் முருடு ஒக்கும் என் சிந்தை" என்கிறார். "மிகவும் கடினமான பராய் மரத்தினுடைய கணுப் போன்றது என்னுடைய நெஞ்சம்" என்று மாணிக்கவாசகர் கூறியது ஞாபகம்வந்த போது, பராய் முருடு உடைக்கமுடியாது என்று ஆள் கூறியதன் அருமையும் எனக்குப் புலப்பட்டது. வழக்கிலுள்ள 'பொரா' மரம் என்பது "பராய்" என்றும் அறிந்தேன். மாணிக்கவாசகர் பராய் முருடு என்று எளிதாகக் கூறிய உவமை வாழ்க்கை அனுபவத்தோடு எவ்வளவு ஒன்றிப் பொருந்துகிறது என்பதையும் உணர்ந்தேன்.

(முருடு என்பது, சாதாரண வழக்கில் மரக்கணுவைக் குறிக்கும் சொல். பராய் முருடு என்பது, கட்டையல்ல, கணு என்பது இங்கு நினைவுகூர வேண்டியது.)

திருக்குறள், திருவாசகம் போன்ற அருள்மொழிகளை உணர்வதற்கு வாழ்க்கை அனுபவம் (ஆன்ம அனுபவம் மட்டும் அல்ல) நிரம்பவேண்டுமென்று திரு. ரசிகமணி டி.கே.சி. அவர்கள் அடிக்கடி செல்லுவார். பராய் முருடு வகையில் அது மிகவும் உண்மையான சொல்.

---

## திலகவதியார் திண்மை*

(குமாரி - வி. வசந்தா, மாணவி, மனவாசகங்கடந்தார் தமிழ்மறைப் பள்ளி, திருவதிகை)

மாண்பமைந்த மகாசன்னிதானம் அவர்களே! ஏனைய தாய் தந்தையர்களே!

உங்கள் அனைவருக்கும் எனது அன்புகலந்த வணக்கம். பழமை வாய்ந்த நமது பதியில் இவ்வாண்டில்தான், அரும் பணி ஆற்றிவருகின்ற அருள்நெறிக் கழகத்தார் என்னைப் போன்ற சிறுமியர், சிறுவர்களுக்குச் சமயப்பணிகளில் பங்கு தந்து பயன்பெறச் செய்துள்ளனர். அது காரணமாகவே, உங்கள்முன் நான் இன்று நிற்குமாறும், பேசுமாறும் பேறு பெற்றேன். இந்நிலை, அவர்கள் கழகத்துப் பிரிவாகிய மனவாசகங்கடந்தார் தமிழ்மறைப் பள்ளியில் சென்ற ஓராண்டாகத் தமிழ்மறை கற்றுப்பழகியதால், நேர்ந்ததெனலாம். அப்பள்ளியும், அக்கழகமும், திருவீரட்டனார் திருவருளால் தழைத்து இனிதோங்கி நற்பணி செய்யுமாறு எல்லாம் வல்ல பெருமானை வேண்டுகிறேன்.

சிறியவளாகிய யான் பேசும் பொருளாக அமைந்தது, "திலகவதியார் திண்மை" என்பது. திண்மையானது,

---

*இச் சொற்பொழிவு திருவதிகையில் 12-4-1960-ல் நடந்தேறிய அப்பர் விழா முதலாம் நாளில் அருள்நெறிக் கழகத்தார் ஆதரவில் நடைபெற்ற கூட்டத்தில் தவப்பெருந்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் தலைமையின்கீழ் நிகழ்த்தப்பட்டது.

உறுதி, கற்பு, வன்மை என்னும் பொருள்களை உடையது. எனவே திலகவதியார் என்னும் பெருமாட்டியாருடைய, உறுதிபற்றியும், கற்புபற்றியும், செந்நெறியில் செல்லும் வன்மை பற்றியும், பேச வேண்டியவளாகிறேன். முதலில் திலகவதியார் என்பவர் யார்? இப்பக்கங்களிலெல்லாம் பிறக்கும் பெண் குழந்தைக்குப் பெரியநாயகி என்றும், திலகவதியார் என்றும் பெரும்பாலும் பெயர் சூட்டுகிறார்கள். அதனாலேயே திலகவதியார் என்னும் திருப்பெயருக்கு மிக்க சிறப்பு உண்டு என்று தெரிகிறது. அந்த அம்மையார் இங்கு நின்றும் ஆறுமைல் தொலைவில் உள்ள திரு ஆமூர் என்னும் ஊரில் சைவவேளாளர் குடும்பத்தில் புகழனார் என்ற பெரியாருக்கும், அவர்தம் வாழ்க்கைத் துணைவியாராகிய மாதினியாருக்கும் முதலில் பிறந்த செல்வப் பெண். இவருக்குப் பின்னேதான், தேவாரத் திருப்பதிகங்களை அருளிய திருநாவுக்கரசுசுவாமிகள் பிறந்தருளினார். இதனால் நமது திலகவதியாரும், திருநாவுக்கரசரும், தமக்கையும், தம்பியுமாவார்கள். அவ்வம்மையாரின் உறுதியும், செந்நெறி வண்மையும், கற்பு நிலையும், அவருக்கு உலகில் என்றும் மறவாத புகழை நிலை நாட்டி உள்ளன. இத்தகைய அருங்குணங்களை விளக்கும் செயல்களைக் கருதுவோம்.

செல்வக் குடும்பத்தில் பிறந்தவர்கள் பலவகைச் சீராட்டுகளால் வளர்ந்தார்கள். திலகவதியார் பன்னிரண்டு பிராயம் அடைந்தனர். பண்டை வழக்கப்படி பன்னீராட்டைப் பிராயத்தவளுக்குத் திருமணம்செய்விப்பது நூல்களில் பரக்கக் காணலாம். அக்காலத்தில் விளங்கிய சேனாபதி கலிப்பகையார் இந்த அம்மையாரை மணம்பேசப் புகழனார்பால் சில முதியோர்களை அனுப்பினர். புகழனார் குணம் விசாரித்து, குலம் ஆராய்ந்து, திருமணம் செய்ய இசைவு அறிவித்தார். மணம் பேச வந்தவர்கள் சென்று அறிவித்த பின்னர், திருமணம் செய்வதற்கு முன்பாகக் கலிப்பகையார், வேந்தன் ஆணையால் பகைவர்மேல் போர்க்களத்திற்குச் சென்றார். பல ஆண்டுகள் போர் நிகழ்ந்தது. அப்போரிடையே கலிப்பகையார் உயிர் கொடுத்துப் புகழ் கொண்

டார். இச்செய்தி வருவதற்குமுன் புகழனார் மூப்பினால் துயர் அடைந்து இறந்தனர். அக்கால வழக்கப்படி மாதினி யார் தம் கணவனுடன் உடன்கட்டை ஏறி விண்ணுலகு அடைந்தார். திலகவதியாரும், திருநாவுக்கரசராகிய மரு ணீக்கியாரும் பெருந்துயரம் அடைந்தார்கள். ஒருவாறு தன் சுற்றத்தார் தேற்றத் தேறி இருக்கின்ற அளவில், போருக்குச் சென்றிருந்த கலிப்பகையார் இறந்த செய்தி எட்டியது. தம்பியரோடு தனித்து வாழும் திலகவதியார் பெரும் துன்பம் கொண்டவர்களாய்த் தீ வளர்த்து அதன் கண் இறங்க மனம் கொண்டார். அவர்களின் மனக் கருத்தை அறிந்த மருணீக்கியார் மனம் நொந்து திலகவதி யார் திருவடிகளில் விழுந்து வணங்கி, அம்மையே தந்தை, தாய், இறந்த பின்பு தங்களையே தந்தை, தாயாகப் போற்றும் மனம் கொண்டிருந்தேன். என்னைத் தவிக்கவிட்டு ஏகுவீ ரெனில் உமக்கு முன்னர் நான் இறப்பேன் என்று கண்ணீர் சோர அழுதனர். அவ்வழுகை திலகவதியார் திருவுள்ளத்தை இறங்கச் செய்தது. பிறர் வாழ நாம் வாழ்வது என்ற குறிக் கோள் உடையவரானார். தம்பியார் உளராக என்ற தயா எழுந் தது. விண்ணுலகம் அணைய நினைத்த நிலையை விலக்கினார். அணி செய்யும் பொன் கலங்கள் தாங்காது நீக்கினார். அனைத் துயிர்க்கும் அருள் தாங்கினார். இறைவனைத் தன் வாழ் நாள் முழுவதும் ஏத்தி வழிபடுவதே கடனென நினைத்தார். தன் தம்பியாருக்கு உறுதுணை என நின்றார். மருணீக்கியா ருக்கு மகிழ்ச்சி தோன்றியது.

இனி, குடும்ப நிலையில் நேர்ந்த துன்பங்கள் அவர்தம் ஆராய்ச்சியினைத் தொடங்கச் செய்தது. துன்ப இன்ப அனுபவங்கள் ஊழ்வினைக் காரணமாக வருவன என அறிந் தார். அறங்கள் பல செய்ய உளம் கொண்டார். சோலை கள் வைத்தார்; குளங்கள் வெட்டினார்; தருமச்சாலைகள் அமைத்தார்; தண்ணீர் பந்தல்கள் நாட்டினார்; வறுமை யுடையோர்க்குப் பொருள் அளித்தார்; விருந்தளித்தார்; நாவலர்க்கு நிதி அளித்தார்; யாவர்க்கும் வேண்டுவன, வேண்டுவன விரும்பி அளித்தார். அவ்வாறு அறங்கள் ஆற்றி

யும், அவர் அறிவின் ஆராய்ச்சி முடியவில்லை. உலகில் மக்கள் இறப்பதும், பொருள் கெடுவதும், இளமை விரைந்து ஒழிவதும் கண்கூடாகப் பார்ப்பது காரணமாக அவரிடத்தே உலகின்கண் வெறுப்பு தோன்றியது. எவ்வகைப் பற்றினையும் நீங்குவது என்பதனை மேற்கொண்டார். உண்மை உணர வேண்டும் என்று நூல்களை ஆராய்ந்தார். பல சமய நூல்களை ஓதுகின்ற பள்ளிகளிலும் புகுந்து அவர்தம் பழக்கங்களையும், வழக்கங்களையும், ஆராய்வது, உண்மை அறிவது என்னும் நோக்கங்களையே பெற்றிருந்தார். இத்துணையும் அவர்தம் அறிவே தொழில் பட்டது. தம்மினும் மேலாகும் இறையருள் தோய்வு இல்லாமையால் உண்மை தெரிய மாட்டாது சமண சமயமே சிறந்தது என உறுதி கொண்டு திலகவதியாரை விட்டு நீங்கினர். பாடலிபுரத்தில் சமணர் பாழிமை அடைந்தார். சமணசமயக் கலைகளைத் துறை போகக் கற்றார். தெளிவடைந்தார்; புத்தருள் தேரரை வென்றார்; தருமசேனரானர்.

மருணீக்கியார் நிலை இவ்வாருக, திருவாமூரில் திலகவதியாருக்குத் தம்பியின் பிரிவால் தளர்ச்சி உண்டாயிற்று. தம்பியார் வருவார், திரும்புவார் என்று பன்னெடுங்காலம் கடந்தார். அவர்கள் செல்வம் சுருங்கியது. ஊர் கடந்து செல்ல நினைத்தார். சமய வாழ்வு வாழ்வதற்கு ஒரு நல்ல ஊரை நாடினர். திருவதிகையைத் தேர்ந்தார்கள். போாத பாசப்பிணிப்பைப் ஒழிக்க வீரட்டப் பெருமானுக்குத் தொண்டுசெய்ய நினைத்தார். தென்திசையில் கங்கை என்று சொல்லப்படும் கெடிலநதியின் வடகரையில் உள்ள திருவதிகை வீரட்டானம் சேர்ந்தார்கள். அம்மையாரின் உறுதி, செந்நெறிப் பண்பின் வன்மை, அவர் தம் வாழ்க்கை துணிவினுல் தெரிவதன்றே? மணம் செய்யவந்த கலிப்பகையார் இறக்கவும், மறுகணவரை நினையா மங்கையின் கற்பின் திறம், என்னென்று சொல்லுவது? அவர்தம் அறிவும், இச்சையும், செயலும் அதிகை வீரட்டர்பால் நிலைத்தன. அன்புடன் அதிகாலை எழுவார்; காலைக்கடன்களை முடித்துக் கெடிலநதியில் மூழ்கி நீராடுவார்; பிறகு திருநீறணிந்து திருவைந்

தெழுந்து ஓதிக்கொண்டே திருவலகு கொண்டு திருக்கோயி லின் அசுத்தங்களை நீக்குவார்; சாணத்தால் மெழுக்கிடுவர்; நந்தவனத்தில் நறுமலர் கொய்வார்; அம்மலர்களை ஆராய்ந்து அன்புநாரால் இண்டை, கண்ணி, தொடை முதலியன கட்டு வார், காலங்களில் திருக்கோயிலுக்குச் சென்று அவைகளைக் கொடுப்பார். மாலைகளை அணிவித்துக் கண்களால் கண்டு மகிழ்வார்; பன்முறையும் வணங்குவார், தன் தம்பியார் மரு ணீக்கியாரை மறந்தாரில்லை. அவர் புறச் சமயத்தே விளங்கி யிருப்பது பழுதென நினைத்தார்; மீண்டும் அவர் சைவ சமயத்தே வருவித்துத் தரவேண்டும் என்று திருவீரட்டப் பெருமானைப் பல நாளும் வேண்டினர். வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய் என்பது அப்பர் அருண் மொழி. அது இறைவனது பொய்யாத் திருவருளைக் குறிப் பது. திலகவதியார் விண்ணப்பத்தையுணர்ந்த திருவீரட்டப் பெருமான் அவர்தம் கனவில் அணைந்தார். திருவுருவத்தைக் காட்டினர். அம்மையாரிடத்து "உன்னுடைய மனக்கவலை ஒழிவாய், உனது தம்பி முன்னே முனியாகி யெனை அடை யத் தவமுயன்றுள்ளான். சூலைமடுத்து ஆள்வம்" என்று அருளினர். அம்மையாரும் துயில் நீங்கி எழுந்து வீரட்டப் பெருமானைப் பன்முறையும் வணங்கினர்கள்.

இங்ஙனமாக, இறைவன் திருவருளால் பாடலிபுத்திரத் தில் தருமசேனருக்குச் சூலைநோய் தோன்றியது. வயிற் றோடு குடல்கள் துடக்கியும், முடக்கியும் துன்புறுத்தின; ஆ என்று அலறினர்; எழுந்தார்; ஓடினர்; படுத்தார்; வயிற்றோடு துடைகளைக் கட்டிப்பிணைத்தார்; வயிற்றைப் பிசைந்தார்; பொறுக்கொண்ணு நிலைமையில் பதைத்தார்; கிடந்தார்; சமணர்கள் மருந்து கொடுத்தனர்; மந்திரநீர் குடிப்பித்தார்கள்; மாந்திரீகம் பயின்றார்கள்; எவைகளா லும் பயனில்லை; அவர்களும் கைவிட்டனர். ஈசர் அருள் கூடியது. திலகவதியார் நினைவு எழுந்தது. தமக்குச் சோற் றுக் கவளம் தருகின்ற பாகனைத் தமக்கையார்பால் அனுப்பி னர். பாகனும் சென்று அம்மையாரை வணங்கி அவர் தம்பியார் சூலைநோயால் அல்லற்படுவதை அறிவித்துத் தம்

முடன் வருமாறு வேண்டினன். அம்மையாரும் சமணர் பாழிக்கு வர இயலாது என்று மறுத்தனர். பாகனும் தருமசேனர்பால் திரும்பிச்சென்றான். தருமசேனரிடம் தமக்கையர்பால் நிகழ்ந்ததை அறிவித்தான். திருவதிகைக்குச் செல்ல அவா எழுந்தது. தமக்கையாரை நாடிச்செல்வேன் என்று துணிந்தார். வெண்புடவை சுற்றிக்கொண்டு சமணர் பாழியை விட்டு எவரும் அறியாதவண்ணம் நடந்தார். உலகில் நிறைந்த இருள் மாறுகின்ற திருப்பள்ளியெழுச்சிக் காலத்தில் திருவதிகையினில் திலகவதியார் இருந்த திருமடத்தைச் சென்றடைந்தார்.

அச்சமயம் திலகவதியார் திருக்கோயிலிற்கு எழுந்தருளுகின்ற காலமாக இருந்தது. தருமசேனர் திலகவதியாருடைய செவ்விய கோலத்தைக் கண்டு அவரது திருவடியில் வீழ்ந்து வணங்கினர். "நம் குலம் செய்த நற்றவத்தின் பயன் அனையீர்! இந்த உடல் சூலைநோயால் வருந்தும் தன்மை அடைந்தேன். இனி மயங்காது உய்ந்து கரையேறுகிற வழியை உரைத்தருளும்" என்று வேண்டினர். தன்னை வணங்குகின்ற தம்பியாரைத் திலகவதியார் நோக்கி "உண்மை நெறி அறியாது புறச்சமயக் குழியில் வீழ்ந்து மயங்குபவரே! எழுந்திரீர்" என்று கூறினர். அவ்வுரை கேட்டபோது மருணீக்கியார் உடல் நடுக்கத்தோடு எழுந்து தொழுது கொண்டு நின்றார். உயர்ந்த தவம் உடைய திலகவதியார் "இது கற்றைவேணியர் அருள் ஆகும். தம்மை அடைந்தார் வினையை போக்குபவன் இறைவன். அவரைப் பணிந்து பணி செய்வீர்" என்று ஆணையிட்டார். திருவெண்ணீற்றினை அஞ்செழுத்து ஓதி அவர் தம் கையிடத்தே கொடுத்தார். அதனை அவர் தமது நெற்றியிடத்தும், உடல் முழுவதுமாக அணிந்து திலகவதியார் பின்னே தொடர்ந்து சென்றார். திலகவதியார் கைகளில் திருவலகும், திருமெழுக்கும், தோண்டியும், கொண்டு திருவீரட்டப் பெருமான் கோயிலுக்குள் மருணீக்கியாரோடு புகுந்தார்கள். மருணீக்கியார் திருவீரட்டப் பெருமான் திருக்கோயிலைத் தொழுது வலமாகச் சூழ்ந்துவந்து திருமுன் வணங்கினர். உண்மை செறிந்த திருப்பதிகங்களைப்

பாட உணர்வு பெற்றார். "கூற்றாயினவாறு விலக்ககிலீர், கொடுமை பல செய்தன நான் அறியேன், ஏற்றாய் அடிக்கே இரவும் பகலும், பிரியாது வணங்குவன் எப்பொழுதும், தோற்றாதென் வயிற்றின் அகம்படியே, குடரோடு துடக்கி முடக்கியிட, ஆற்றேனடியேன் அதிகைக் கெடில, வீரட்டானத்துறை அம்மானே" என்ற திருப்பதிகத்தைச் சிந்தையில் மிகுந்த நேசத்தோடு ஓதினார். சூலைநோய் அகன்றது. தெருட்சி, மருட்சியினால் முதல்வன் கருணைக்கடல் மூழ்கினார். இவ்வாழ்வைக் கூட்டிய சூலைநோய்க்கு என்ன கைம்மாறு செய்ய இயலும் என்று இரங்கினார் இவ்வாறு இருக்கின்ற அளவில் "செந்தமிழ்ப் பாடல் சிறக்கப்பாடினாய். ஆதலினால் உலகேழினும் நின் நாமம் நாவுக்கரசு என்று மன்னுக" என்று ஆகாயத்திடையே அசரீரி எழுந்தது. அன்றுமுதல் திருநாவுக்கரசர் சிவபெருமானைப் பாடுவதென்ற நியமம் கொண்டார். கையினால் உழவாரப் படைகொண்டு உலகம்வாழப் பணிசெய்தார். சைவ சமயத்தின் முதற்பெருங் குரவரானார். இச்சீரியநிலை திலகவதியார் திண்மையால் ஆனதன்றோ? எனது சின்மொழியை இதுகாறும் கேட்ட பெரியீர் அனைவருக்கும் என்னைப்பேசுமாறு செய்வித்த அருள் நெறிக் கழகத்தாருக்கும் எனது தாழ்மையான வணக்கம்.

——

# மதிப்புரை

மறைமலை அடிகள் வரலாறு :—'பைரன்' என்னும் கவிஞரைப்பற்றி 'மேத்யூ ஆர்னல்ட்' என்னும் அறிஞர் ("The Greatest talent of our Century") எனக் கூறியது போல, நமது தமிழ் நாட்டில் இவ்விருபதாம் நூற்றாண்டின் இணையற்ற பெரும்புலவராக விளங்கியவர் ஆசிரியர் மறைமலையடிகள். "இனியார் உளரோ? முன்னும் இல்லை!" ("A Personality in eminence such as has never been yet, and is not likely to come again") என்

னும் நிலையில், 'தென்சொற் கடல் கடந்து வட சொற்கு எல்லை தேர்ந்து' ஆங்கிலத்தின் கரைகண்டு, மும்மொழிப் புலமைச் செம்மலாராகத் திகழ்ந்தவர் அடிகள். தமிழில் உரை நடைக்கு மேலும் மிக இனிமை ஊட்டியவர் ஆசிரியர் மறைமலை அடிகளேயாவர் ("He found it brick and left it marble"—Johnson on Dryden) "ஒரு வரி வருணனை எழுதுதற்கு அவர் நூறுகல் தொலைவு பயணம் செய்தார்; ஒரு சொற்றொடர் எழுதுதற்குக் குறைந்தது இருபது நூல்களையாவது ஒப்புநோக்கினர்" ("To write a line of description, he travelled hundred miles; to write a single sentence, he Consulted atleast twenty books"—W. M. Thackeray on Lord Macaulay) என ஆங்கில அறிஞர் ஒருவர் குறிப்பிட்டதுபோன்று, தாம் இயற்றும் நூல்களை அத்துணை நுணுகி யாராய்ந்து, பொறுப்புடன்—திருத்தமாக எழுதியளித்துச் சிறந்த பெருந்தொண்டாற்றித் தமிழ் மொழியை வளர்த்த பெருமை, இந்நூற்றுண்டில் மறைமலையடிகளாருக்கே உரியதாகும். அவர் தமிழில் தொடாத துறைகளும், தொட்டுப் பொலிவுறச்செய்யாத நெறிகளும் இல்லை ("He touched nothing which he did not adorn"—Dr. Johnson on Goldsmith) எனத் துணிந்து சொல்லலாம். அடிகளின் அருமை பெருமைகளை யெல்லாம் நினைந்து பார்க்குந்தொறும் "மானுடம் இவர் தாம் அல்லர்! நற்பெருந் தெய்வம்!" என்னும் பெருவியப்புணர்வே நம்மனோர்க்கு மேலோங்கி நிற்கின்றது.

அத்தகு புலமைசான்ற வித்தகராய நமது மறைமலை அடிகளாரின் அரிய பெரிய வாழ்க்கை வரலாறு, தமிழர் அனைவராலும் அறிந்து மகிழத்தகுந்த பெருஞ்சிறப்புடையதாகும். மேலை நாடுகளில் அறிஞர்களின் வாழ்க்கை வரலாறுகள் பலப்பல, சிறந்த முறையில் எழுதப்பெற்றுப் பெரிதும் போற்றப்பட்டுவருகின்றன. பாஸ்வெல் என்பவர் எழுதிய "ஜான்ஸனின் வாழ்க்கை வரலாறு" தலைசிறந்த தொன்றாக அறிஞர் அனைவராலும் புகழ்ந்து போற்றப் பெறுகின்றது. அத்தகைய பல நூல்கள் தமிழில் இனியாதல் தோன்றுதல்

வேண்டும். அதற்கு ஒரு வழிகாட்டியும் முன்னோடியும் போல, 'மறைமலையடிகள் வரலாறு' என்னும் இந்நூல், அவர் தம் திருமகனார் - தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் - திருவாவடுதுறை ஆதீன வித்துவான் - சித்தாந்த தினகரன் - உயர்திரு. மறை. திருநாவுக்கரசனார் அவர்களாற் சிறந்த முறையில் சுவை பெருகவும் விரிவாகவும் ஏறத்தாழ 900 பக்கங்களில் நன்கினிது ஆராய்ந்து எழுதப் பெற்றுள்ளது. 'மிகமிகப் பெரியவர்கள் மிகமிகச் சிறிய வாழ்க்கை வரலாற்று நூல்களையே பெற்றுள்ளனர்' ("Greatest men have shortest biographies") எனக் கூறுவதுண்டு. அக்குறை விரிந்த இந்நூலால் ஓரளவு தீர்ந்தது எனலாம். எத்துணையோ பல குறிப்புக்களையும் நிகழ்ச்சிகளையும் செய்திகளையும் ஒன்றுவிடாமற் சேர்த்துத் தொகுத்து இந்நூலைத் திருத்தமுறச் செவ்விதின் எழுதி வெளியிடுவதற்காக, ஆசிரியர் அவர்கள் மேற்கொண்டுள்ள பெரு முயற்சிகள் மிகவும் பாராட்டிப் போற்றுதற் குரியன வாகும். " ஒரு நல்ல நூலானது ஒரு சிறந்த பேருயிரின் அரிய வாழ்க்கைக் குருதியின் பிழிவேயாகும் " ("A Good book is the precious life-blood of a master-spirit "—John Milton.) என்றதற்கேற்ப, இந்நூலைப் பேருழைப்பெடுத்து இதன் ஆசிரியர் அவர்கள் அரிதின் முயன்று எழுதியிருக்கின்ற திறம், அனைவரும்வியந்து மகிழ் தற்குரியதாகும். " தந்தையறிவு மகனறிவு " அன்றோ ?

இத்தகையதொரு சிறந்த விரிந்த அரும்பெறல் நூலை இயற்றி வெளியிட்டதன் வாயிலாக, இந்நூலாசிரியர் அவர்கள், ஒரு மகன் தனது தந்தைக்குச் செய்தற்குரிய மிக மேலான கடமைகளையெல்லாம் குறைவறச்செய்து முடித்து விட்டிருக்கின்றார் எனக் கூறலாம்.

இந்நூலின் தொடக்கத்தே சைவப்பெரியார் திரு. சச்சிதானந்தம்பிள்ளை அவர்களின் அணிந்துரை அணி செய்கின்றது. அடுத்து மாபெரும் புலவர்கள் பலர் அடிகளாரின் அருமை பெருமைகள் பற்றிஅவர்தம் மறைவுக்கு முன்னும்

பின்னும் எழுதியவை, 'புகழ்மலர்' என்னும் தலைப்பில் திரட்டித் தரப்பெற்றுள்ளன. அடிகளாரின் திருவுருவப்படங்கள் பலப்பல அடுத்தமைந்து நூலின் சிறப்பை மேலும் மிகுதிப்படுத்துகின்றன. பின்னர், நாகை வாழ்க்கை—சென்னை வாழ்க்கை—பல்லாவர வாழ்க்கை என்னும் முப்பெரும் பிரிவுகளில், எத்துணையோ பல உட்பிரிவுகள் அமைய இந்நூல் யாக்கப்பெற்றுள்ளது. நூலின் இம் முப்பெரும் பிரிவுகளும் புகார்க் காண்டம்—மதுரைக் காண்டம்—வஞ்சிக் காண்டம் என்னும் சிலப்பதிகார அமைப்பினை நினைப்பிக்கின்றன. அடிகளின் தோற்றம் முதல் இறுதிவரை எல்லா நிகழ்ச்சிகளும் இயன்றவரை ஒன்றுவிடாமல் எழுதப்பெற்றுள்ளன. அடிகளோடு தொடர்புகொண்ட எண்ணிறந்த புலவர் பெருமக்களைப்பற்றியும், பல்வேறு அவைகள் கழகங்கள் முதலியனபற்றியும், அடிகள் நிகழ்த்திய பற்பல அரிய இனிய ஆராய்ச்சிச் சொற்பொழிவுகள் பற்றியுமெல்லாம், இந்நூலின் வாயிலாக நாம் விரிவாகவும் தெளிவாகவும் தெரிந்துகொள்ளலாம். சமயம் இலக்கியம் அரசியல் முதலிய துறைகளில் அடிகளின் கொள்கைகள்பற்றிய சிலசில விளக்கங்களும் இடையிடையே ஏற்ற பெற்றி தரப்பெற்றுள்ளன. 'கலை எனப்படுவது வாழ்க்கையை ஒரு பண்பின்மூலம் காண்பது' ("Art is life seen through a temperament") என்னும் வரையறைக்குப் பொருந்திய முறையில் அவ்விளக்கங்கள் சிறந்து திகழ்கின்றன. இந்நூல் தமிழன்பர் அனைவர்க்கும் பெருவிருந்தாகற்பாலது என்பதில் ஐயமில்லை. இதனை இனிதியற்றி யளித்துள்ள திரு. மறை. திருநாவுக்கரசனுர் அவர்களுக்குத் தமிழ்கூறும் நல்லுலகம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

[பக்கம் : 900 ; விலை ரூ. 15. விற்பனை உரிமை : திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை–1.]

—முருகவேள்

---

# கடவுளால் முடியாத காரியங்கள்

[முரு. பழ. இரத்தினம் செட்டியார்]

(மலர் - 33 ; இதழ் - 5 ; 160-ம் பக்கத் தொடர்ச்சி)

மூலப்பொருள்

ஏதேனும் ஒரு பொருள் பிறபொருட் சேர்க்கை இன்றிப் பகுக்கப்பட முடியாத தனிப் பொருளாய் நிற்குமானால், அது மூலப்பொருள் என்றும் அதனை யாரும் புதிதாகப் படைக்க வேண்டியதில்லை என்றும், அஃது அநாதியாய் என்றும் இருக்கும் என்றும் சைவ சித்தாந்தம் முடிபு கண்டிருக்கிறது. இம்முடிபை நாத்திகக் கொள்கையுடைவர்களும் ஏற்பவர்களே என்பதை “உலகம் இயற்கை; அதனை யாரும் படைக்கவில்லை” என்னும், அவர்கள் கூற்றே தெளிவாக்குகிறது. எனவே, “இறைவன் மூலப்பொருள் ; அவனை யாரும் உண்டாக்கவில்லை ; அவன் என்றும் உள்ளவன் ; அதுபோல் உலக மூலகாரணப் பொருளாகிய சட ஆற்றலை யாரும் உண்டாக்கவில்லை ; அஃது என்றும் உள்ளது ; ஆனால் அறிவற்ற அந்தச் சடஆற்றல் தானே பிரபஞ்சமாக மாறமுடியாது ; ஆகவே இறைவன் அதனை உலகாக மாற்றினான்,” எனச் சைவ சித்தாந்த வழி நின்று கூறுவதை அவர்கள் எங்ஙனம் மறுக்கமுடியும் ?

உயிர்கள் நின்றுலவும் உடல்கள் கூட்டுப்பொருட்களால் ஆகி இருப்பதை நாம் காண்பதால் அவை படைக்கப்பட்டவையே ஆகும் அன்றி மூலப்பொருட்கள் போல் என்றும் உள்ளவை எனக் கூறவாராது. அவ்வுடல்களில் அமைந்திருக்கும் கருவிகளோ மிக வியக்கத்தக்கவையாய் இருக்கின்றன. ஆனால் உயிர் இல்லாவிட்டால் அக்கருவிகளுக்கு இயக்கம் இல்லை. எனவே அக்கருவிகளுக்கு அறிவு இல்லை என்றும், அக்கருவிகளை இயக்கும் உயிர்க்கே அறிவு உண்டு என்றும் கொள்வதில் தவறிருக்கமுடியாது. அறிவுடைப் பொருளாகிய உயிர், இக்கருவிகளைப் படைத்துக் கொள்ளும் ஆற்றல்

பெற்றதாக இல்லை. அறிவற்ற சட ஆற்றல் இக்கருவிகளைப் படைத்திருக்கும் எனச் சொல்வதும் பொருந்த மற்றதாக இருக்கிறது. ஆகவே அறிவற்ற "சடஆற்றலை" உலகாக மாற்றி, அச்சட ஆற்றலினின்றும் வியக்கத்தக்க இக்கருவிகளைப் பேராற்றலும் பேரறிவும் வாய்ந்த ஒரு பொருளே உயிர்களுக்குப் படைத்தளித்திருக்க வேண்டும் எனக் கொள்வதைக் "குருட்டு நம்பிக்கை" எனக் கூறமுடியுமா? இதனால் பகுத்தறிவுக் கொள்கையினரும் இறைவன் உண்டு என்னும் கொள்கையை மறுக்கமுடியாது என்பது இனிது விளங்கும்.

மாயை

மேலே நாம் எடுத்துக் காட்டிய சட ஆற்றலைத்தான் சைவ சித்தாந்தம் "மாயை" எனக் குறிப்பிடுகிறதென்று கொள்ளகக் கூடாது. சித்தாந்த அறிஞர்களிடையே இப்பொழுது ஒரு மயக்கம் காணப்படுகின்றது. விஞ்ஞான நூற் கருத்திற்கேற்பவே சித்தாந்த முடிபுகள் இருக்கின்றன என்று சொன்னால், மேல் நாட்டினர்க்கும் அறிவியல் வாதிகளுக்கும் கவர்ச்சியாக இருக்கும் என்னும் நினைப்பில் 'சார்லஸ் டார்வி' வின் பரிணாம வாதம் போன்ற கொள்கைகளெல்லாம் சித்தாந்தத்திற்கு உடன்பாடெனக் காட்டும் வகையில் விளக்கங்கள் எழுத முற்படுகின்றனர். சில கருத்துக்கள் ஓரோவழி ஒத்திருக்கக்கூடும். ஆனால் விஞ்ஞான முடிபுகளுக்கு அரண் செய்யாத சித்தாந்தக் கருத்துக்களை வலிந்து சரி செய்து ஒத்திருப்பது போல மக்கள் கருதும்படி எழுதுவது நேர்மையாகாது. இதனால் சித்தாந்தத்திற்கும் பெருமை இல்லை; விஞ்ஞானத்திற்கும் பெருமை இல்லை. அந்த, அந்தச் சாத்திர முடிபுகளை அப்படியே எழுதி, இரண்டும் ஒத்து நிற்கிற இடங்கள் இருக்குமானால் அவற்றை மட்டும் எடுத்துக் காட்டுவதே நேர்மையாகும்.

சித்தாந்தம் உலக மூலகாரணப் பொருளாகிய மாயையைச் சுத்தமாயை, அசுத்தமாயை என இரண்டாகக்கொண்டு அவற்றுள் அசுத்தமாயையின் காரியம் பிரகிருதி மாயை

எனச் சொல்கிறது. விஞ்ஞானிகள் கூறும் சட ஆற்றல் பிரகிருதி மாயையைச் சார்ந்ததென்றே நாம் நினைக்க வேண்டியதிருக்கிறது. இன்னும் இது பற்றிய அதிகமான விவரங்களை விஞ்ஞானம் கூறினால்தான் நாம் திடமான ஒரு முடிவுக்கு வரமுடியும். இங்கு, "இறைவன் இல்லை" எனக் கூறும் நாத்திக சமயத்தினர், விஞ்ஞான நூற்களை மட்டுமே ஏற்பவர்களாதலால், அவர்கள் ஏற்கும் நூல் வழியே சென்று, கடவுள் உண்மையை நிறுவுவதற்காகவே, "சட ஆற்றல்" அளவோடு நின்று ஆராய வேண்டியதாயிற்றென்க.

உலகப்படைப்பு

இதுகாறும் இறைவனும் மாயையும் அநாதி நித்தியமாக உண்டு என்பதை நிறுவினோம். இனி, "மாயையிலிருந்து உலகை உண்டாக்கவேண்டிய அவசியம் இறைவனுக்கு ஏன் ஏற்பட்டது? என்னும் கேள்வியை ஆராய்வோம்.

சடப் பொருட்களின் சேர்க்கையால் உயிர் உண்டாகுமா? என்பதை ஆராய்ந்த அறிஞர் "ஜான் தின்டால்" (Prof. John Tyndall), "Life does not appear without the operation of antecedent life"—அஃதாவது "வாழ்க்கை என்பது முன்னை வாழ்க்கையின் விளைவு இன்றித் தோன்றுவதில்லை" என முடிபு கூறியுள்ளார். இம்முடிபை விஞ்ஞானம் இன்றும் மறுக்கத் துணியவில்லை. "உயிர் எங்ஙனம் உண்டாகியிருக்கும் என்பது தெரியவில்லை" என்றுதான் அது சொல்கிறதே அன்றி, சடப்பொருளிலிருந்து அஃது உண்டாயிருக்கும் எனச் சொல்லவில்லை. அங்ஙனமிருந்தும் சிலர், "உயிர் சடப் பொருளிலிருந்து உண்டாயிற்று" என விஞ்ஞானம் கூறுவதாக எழுதுகின்றனர். உலகாயதக் கொள்கையினர் கூற்றை விஞ்ஞானிகள் கூற்றாகச் சொல்வது தவறாகும். விஞ்ஞானிகளின் முடிபை எவ்வித மறுப்புமின்றி உலகாயதக் கொள்கையினர் ஏற்றுக் கொள்வார்கள்; ஆனால் உலகாயதக் கொள்கையினர் கூற்றை விஞ்ஞானிகள் ஆராய்ந்து பார்க்காமல் ஏற்பதில்லை.

விஞ்ஞான நூற்கள், "மலைகள் வளர்வது; உலோகங்கள் முதிர்வது," போன்ற சடப் பொருள்களின் வளர்ச்சியை ரசாயன வளர்ச்சி (Chemical growth) என்றும் உயிரின வளர்ச்சியை (Biological growth) ரசாயன வளர்ச்சியினின்றும் முற்றிலும் மாறுபட்ட வளர்ச்சி என்றும் வேறு பிரித்தே தெளிவாகக் குறிப்பிட்டு வருகின்றன.

உயிர்களின் வளர்ச்சி பற்றி விஞ்ஞான நூற்கள் விவரிக்கும் முறையிலிருந்தே, அவை சடப் பொருளினின்றும் வேறுபட்டவை என்பது புலனாகிறது. இருப்பினும் இன்னும் ஆராயவேண்டும் என்னும் கருத்தில், "உயிர்கள் எங்ஙனம் துவக்கத்தில் தோன்றியிருக்கும் என்பது தெரியவில்லை" என விஞ்ஞானிகள் கூறிவருகின்றனர்.

விஞ்ஞானம் ஆராய்ந்து முடிவு கூறும் வரை நாம் காத்திருக்க வேண்டியதில்லை. "இறைவன் உண்டு; மாயை உண்டு" என நிறுவியதுமே உயிர்களும் அநாதி நித்தியமாக உண்டு என்பது தானே பெறப்படுகின்றது.

இறைவன் இவ்வுலகை மாயையினின்றும் படைக்க வேண்டிய அவசியம் என்ன? அவனோ தேவையற்றவன். ஆகவே அவனுக்கு இவ்வுலகம் வேண்டியதில்லை. மாயையோ அறிவற்ற சடப் பொருள்; அதற்கும் இவ்வுலகம் தேவை இல்லை. உலகாற் பயன் கொள்ளும் உயிர்கள் இருப்பதை நாம் காண்கிறோம். ஒரு தேவையும் அற்ற இறைவன் இவ்வுயிர்களைப் புதிதாக உண்டாக்க வேண்டிய அவசியம் எதுவும் இருப்பதற்கில்லை. எனவே உயிர்களும் யாராலும் உண்டாக்கப் படாமல் அநாதி நித்தியமாக இருந்திருக்க வேண்டும் என்பதும் அவை பயன் கொள்ளும் பொருட்டே மாயையினின்றும் உலகை இறைவன் படைத்திருக்க வேண்டும் என்பதும் புலனாகின்றன.

உயிர் அறிவுக்கு மறைப்பு

உயிர்கள் உலகால் அடையும் பயன் என்ன? உலக வாழ்க்கை, உயிர்களுக்கு இன்ப, துன்ப அநுபவங்களை ஊட்டி; அறிவு விளக்கமுறச் செய்கிறது. வாழ்க்கையில் அநுபவம் மிக, மிக, அறிவு விளக்கமும் அதிகமாவதைக்

காணலாம். அநாதியிலேயே உயிர்கள் அறிவு விளக்கம் பெற்றவையாக இருந்தால், வாழ்க்கையின் மூலம் படிப் படியே அறிவு விளக்கம் பெறக் காரணம் இல்லை. எனவே அநாதியில் அவை அறிவு விளக்கம் இன்றிக் கிடந்திருக்க வேண்டும். அறியாமை உயிர்களின் இயல்பாக இருந்தால் அவை எக்காலத்தும் அறிவு விளக்கம் பெற முடியாது. ஏனெனில் ஒரு பொருளின் இயல்பு அழிந்தால், அப் பொருளே அழிந்துபோகும். உலகால் உயிர்கள் அறிவு விளக்கம் பெறுவது கண்கூடாதலால், அறியாமை உயிர் களின் இயல்பாக இருக்க முடியாதென்பதும் தெளிவாகிறது. அறியாமை அவற்றின் இயல்பன்று என்றால், அவை அநாதி யிலேயே அறிவுடையவை என்றாகிறது. அங்ஙனமானால் அவை ஏன் உலகவாழ்வின் மூலம் படிப்படியே அறிவு விளக்கம் பெறவேண்டும். இதனை ஆழ்ந்து சிந்தித்தோ மானால் அநாதியிலேயே உயிர்களின் அறிவை ஏதோ ஒரு பொருள் மறைத்திருக்கவேண்டும் என்பது புலனாகின்றது. உலக வாழ்வின் மூலம் அப்பொருளால் ஏற்பட்ட மறைப்பு, சிறிது, சிறிதாக நீங்குகிறதென்றும், அதனாலேயே அவை படிப்படியே அறிவு விளக்கம் பெறுகின்றன என்றும் நாம் கொள்ளவேண்டியதிருக்கிறது.

ஆணவமலம்

உயிர்களின் அறிவை மறைக்கின்றபொருள் யாதாக இருக்கலாம்? இறைவன் அம்மறைப்பைச் செய்யவேண்டிய அவசியம் இல்லை; கருணையாளனாகிய அவன் அதைச் செய் திருக்கவும் முடியாது. உயிர்கள் உலகால் அறிவு விளக்கம் பெறுவதால், உலக மூல காரணப் பொருளாகிய மாயை அம் மறைப்பைச் செய்திருக்குமெனக் கூற இடமில்லை. அறி வுடைய ஒரு பொருள் உயிர்களின் அறிவை மறைத்திருந் தால் அறிவற்ற மாயையினின்றும் உண்டாகும் உலகால் அவை அறிவுவிளக்கம் பெறமுடியாது. ஆகவே அறிவற்ற ஒரு சடப் பொருளாலேயே உயிர்களின் அறிவு மறைக்கப் பட்டிருக்கவேண்டும். அறிவற்ற சடப்பொருளுக்கு எதனை யும் மறைக்கவேண்டும் என்னும் எண்ணம் உண்டாக இட

மில்லே. அப்படியானுல் அச் சடப்பொருளின் இயற்கைத் தன்மையே இருள்போன்ற மறைப்பினை உடையதாக இருத்தல் வேண்டும் என்றும், அது வியாபகமாக யாண்டும் இருந்தமையால் உயிர்கள் அதனைப்பற்றி அநாதியே மறைப்புக்குள்ளாகின என்றும் கொள்ளவேண்டியதிருக்கிறது.

"உயிர்களின் அறிவை மறைத்தபொருள் இறைவனுக வும் இருக்க முடியாது ; மாயையாகவும் இருக்க முடியாது; எனவே வேருெரு சடப்பொருளே இம் மறைப்பைச் செய்திருக்கவேண்டும்" என்று நாம் தெளிந்ததும், "அச் சடப்பொருளை யார் உண்டாக்கியது ?" என்னும் கேள்வி எழுகிறது. மாயை சடமாதலால் அதற்கு எப்பொருளையும் உண்டாக்கத் தெரியாது; தம் அறிவை மறைப்பதற்காகத் தாமே ஒரு பொருளை உயிர்கள் உற்பத்தி செய்துகொள்ளும் எனக் கூறமுடியாது ; கருணையாளனுகிய இறைவனும் இப் பொருளை உண்டாக்கி யிருக்கமாட்டான் ; அவனுக்கு எதனையும் உண்டாக்கவேண்டிய அவசியம் இல்லை. அங்ஙனமானுல் உயிர்களின் அறிவை மறைக்கின்ற இச் சடப்பொருளும் யாராலும் உண்டாக்கப்படாமல் அநாதி நித்தியமாக இருக்கின்ற ஒரு பொருள் என்பது தெளிவாகிறது. இப் பொருளையே, "ஆணவமலம்" எனச் சைவ சித்தாந்தம் கூறுகிறது.

அநாதி நித்தியமாக இருக்கின்ற உயிர்களின் அறிவை, அநாதி நித்தியப் பொருளாகிய ஆணவமலம் மறைத்து நிற்கின்றமையால், அம் மறைப்பினின்றும் உயிர்கள் விடுபட்டு அறிவு விளக்கம் பெறவேண்டும் என்னும் கருணையால், அவ்வுயிர்களின் பொருட்டுத் தனக்கென ஒரு தேவையும் அற்ற இறைவன் மாயையினின்றும் இவ்வுலகை உண்டாக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டதென்று உணர்தல்வேண்டும். உலகில் பிறவி எடுத்த எல்லா உயிர்களும்—ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் ஈருக அத்தனை உயிர்களும்—இன்ப, துன்ப அநுபவங்களைப் பெறுவது அவை அநாதியே உற்ற ஆணவமலபந்த நிவர்த்தியின்பொருட்டே யாதலால், இறைவன் கருணைக்கு இழுக்கொன்றும் இல்லை என்பதும் இதனுல் பெறப்படும்.

இதுகாறும் கூறியவாற்ருல் இறைவன், மாயை, உயிர்கள், ஆணவமலம் ஆகிய பொருட்கள் அநாதி நித்தியமாக உள்ளவை என்பதும், உயிர்களுக்கு அநாதியே ஏற்பட்ட ஆணவமலபந்த நிவர்த்தியின் பொருட்டே இறைவன் ஐந்தொழில் ஆற்றுகிருன் என்பதும் நன்கு விளங்கும். இதனுல் ஏனைய மதத்தினரும், வேதாந்திகளும், நாத்திகரும் ஏற்கும் வண்ணம் அளவை நூன் முறை பிறழாமல் தகுந்த ஏதுக்களோடு சைவ சித்தாந்த உண்மைகள் நிறுவப்பட்டமை காணலாம்.

ஆணவமலம்பற்றி ஐயந்தெளிவுகள்

இனிச் சைவசித்தாந்தம் பயின்றவர்களுக்குள்ளேயே ஆணவமலம்பற்றி நிகழும் சந்தேகங்களைத் தீர்க்கும்பொருட்டுக் "கேள்வியும் பதிலுமாக"ச் சிறிது ஆராய்வோம் :—

(1) உயிர்கள் ஏன் ஆணவமல மறைப்புக் குள்ளாக வேண்டும்? செம்பிற் களிம்புபோல் ஆணவமலம் ஆன்மாவை மறைத்தது என்று இதற்கு விடைசொல்வது, காரண, காரிய முறை பிறழாது ஆராயும் சைவ சித்தாந்தத்திற்கு ஏற்றதன்று. ஆன்மா ஆணவமல மறைப்புக்குள்ளானமைக்கு நிறையக் காரணங்கள் இருக்கின்றன. இறைவனும் அறிவுடைப்பொருள் ; ஆன்மாக்களும் அறிவுடைப் பொருட்கள் ; ஆனுல் ஆணவமலமோ இறைவன் அறிவை மறைக்கவில்லை; உயிர்களின் அறிவைமட்டும்தான் மறைத்து நிற்கிறது. காரணம் என்ன ? இறைவன் தானே அறியும் தன்மைவாய்ந்தவன் ; அநுபவம் இன்றியே முழுதும் உணரும் இயல்பை உடையவன் ; இயக்கும் பொருட்களில் அழுந்திப்போகாமல் தாக்கற நிற்கும் ஆற்றல் படைத்தவன்; எனவே அவன் ஆணவமல மறைப்புக் குள்ளாகவில்லை. உயிர்களோ துணை இன்றி அறிய முடியாதவை ; பற்றிய பொருளில் அழுந்திப் போகும்தன்மை வாய்ந்தவை ; அநுபவம் இன்றி உணரமுடியாத அறிவினை உடையவை. இத்தன்மைகளால் உயிர்கள் மிகவும் எளிமையான அறிவு, இச்சை, செயல்களை உடையவை என்பது நன்கு விளங்கும். அநாதி நித்தியமாயும், வியாபகமாயும், இருள்போன்ற மறைப்பினை இயற்கையில்

உடையதாயும் இருக்கின்ற ஆணவமலத்தை உயிர்கள் தம் எளிய இயல்பால் பற்றி மறைப்புக்குள்ளாயின என்றறிதல் வேண்டும். உயிர்களை இறைவன் உண்டாக்கவில்லையாதலால் அவற்றின் அறிவு, இச்சை, செயல்களையும் அவன் உண்டாக்கவில்லை என்பதும், யாராலும் படைக்கப்படாமல் அநாதியிலேயே எளிமையாக உள்ள உயிர்களின் அறிவு, இச்சை, செயல்களுக்கு அவன் பொறுப்பாளியாகமாட்டான் என்பதும் கூறாமலே விளங்கும். (தொடரும்)

---

## ஈசான சிவாசாரிய சுவாமிகள் மணி விழா

சைவ உலகின் தவச் செல்வரும், வேத நெறியும் சைவ நெறியும் விளங்கச் சித்தாந்த செந்நெறியைப் பரப்பி வருபவரும் ஆகிய மகா மகோபாத்தியாய - சைவ சித்தாந்த சரபம் - சிவாகம ஞானபானு - பழநி-சிவத்திரு. **ஈசான சிவாச்சாரிய சுவாமிகள்** அவர்களுக்கு நாளது சார்வரி ஆண்டு ஆனித் திங்கள் 27-ஆம் நாள் (10–7–60) ஞாயிற்றுக்கிழமை திருவோணத்தன்று 60-ஆம் ஆண்டு நிறைவு எய்துகின்றது. இந்நாள் சைவப் பெருமக்கள் அனைவருக்கும் பொன்னுளாரும்.

சிவத்திரு. ஆசாரிய சுவாமிகள் அவர்கள் சைவ உலகிற்கு ஆற்றி வருகின்ற அருந்தொண்டிற்காகச் சைவ நன்மக்கள் தமது பாராட்டுதலையும் வணக்கத்தையும் தக்க முறையில் தெரிவித்து, இந்த அரிய வாய்ப்பைப் பயன்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கின்றோம்......

—**C. வள்ளிநாயகம் பிள்ளை, B.A.,B.L.,** சமாஜப் பேரன்பர்; தலைவர், நன்னெறி மன்றம், நாகர்கோவில்.

---

## சமாஜ அறிக்கை

சைவ சித்தாந்த மகா சமாஜப் புத்தக விற்பனை அலுவலகம் 1-6-60 முதல் 28, இராமகிருஷ்ண மடத்துச் சாலை, மயிலாப்பூரிலிருந்து 14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4 என்ற முகவரிக்கு மாற்றப்பட்டுள்ளது. புத்தகங்கள் வேண்டுவோர் இம்முகவரிக்கு எழுதவும்.

செட்டியார், ச. சிவகுமாரன், பி. சொக்கலிங்கம், மேயர் கம்பெனி ஆர். மாசிலாமணி முதலியார், சாரதி பிலிம்ஸ் ந. இராமமூர்த்தி, காஞ்சிபுரம் சி. அருணைவடிவேல் முதலியார், வித்துவான். க. ஞானசம்பந்தம் முதலியவர்கள் கலந்துகொண்டு சிறப்பித்தனர். திருக்கோயில் அறங்காவலர்களும், ஊர்ப் பொது மக்களும் பிரசாரக் குழுவினரை வரவேற்று உபசரித்தனர்.

**இராயபுரம் இறைபணிக் கழகம் :** 10-ஆம் ஆண்டு விழா 9–5–60 அன்று, தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்கள் தலைமையில் இனிது நிகழ்ந்தது. அதுபோது, இறைபணிக் கழக வளர்ச்சிக்குப் பேருதவிகள் பல புரிந்து வருபவரும், நமது சமாஜத் தலைவரும் ஆகிய 'ருக்மணி குக்கர்' திரு. **அ. சோமசுந்தரம் செட்டியார்** எம்.ஏ அவர்களுக்கு, இராயபுரம் சைவ மக்கள் சார்பில், "**திருமுறைக்காவலர்**" என்னும் சிறப்புப் பட்டம் பொறித்த பொற்பதக்கத்தினை, அடிகளார் அவர்கள் அணிவித்துச் சிறப்பித்தார்கள். இராயபுரம் பகுதியைச் சார்ந்த பல்வேறு பொதுச் சங்கங்கள் திரு. செட்டியார் அவர்களுக்குப் பாராட்டிதழ்கள் வாசித்தளித்தன. பெருமக்கள் பலர் பேசிச் சிறப்பித்தனர்.

**தூத்துக்குடி சைவ சித்தாந்த சபை :** 76-ஆம் ஆண்டு விழா 21, 22–5–60 தேதிகளில் மிகவும் சிறப்புற நடைபெற்றது. மதுரை மாவட்ட நீதிபதி திரு. டி. எஸ். இராமலிங்கம் பிள்ளை, எம். ஏ., பி. எல். அவர்கள் விழாப் பேரவையைத் தொடங்கி வைத்தார்கள். **ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்** தலைமை தாங்கி, இரு நாட்களிலும் முறையே "சைவ சித்தாந்தம்", "நாயன்மார் திருக்கூட்டம்" என்னும் பொருள்கள் பற்றிப் பேருரைகள் நிகழ்த்தினார்கள். 'மூல இலக்கியம்' 'சேக்கிழார் செய்யுளின் தெய்வ நலம்' என்பன பற்றித் திரு. புலவர் முருகவேள், எம். ஏ., எம்.ஓ.எல். அவர்களும், 'தொண்டர் சீர் பரவுவார்' 'மலர்ச்சோலைத் திருமருகல்' என்னும் பொருள்கள் பற்றி மதுரை ஆதீனச் செஞ்சொல் மாமணி திரு. ச. சிவகுமாரன், எம். ஏ. அவர்களும், 'திருக்குறளும் சைவ சித்தாந்தமும்' என்னும் பொருள் பற்றித் திரு. இலஞ்சி. முத்துக்குமாரசாமி பிள்ளை அவர்களும் சொற்பொழிவாற்றினர். சபைத்தலைவரும், பெருநிலக் கிழவரும் ஆகிய சிவ. ந. சின்னகண்ணுப்பிள்ளை, பி. ஏ., பி. எல். அவர்கள், ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் அவர்களைச் சிறப்பிக்கும்முகத்தான் 21-5-60 அன்று மாலை இனியதொரு

விருந்து நடாத்தினர்கள். திரு. இ. வெண்ணிமாலைப்பிள்ளை பி.எ.,பி.எல். அவர்கள் அனைவர்க்கும் நன்றியுரை கூறிச் சபையின் சார்பில் சில தீர்மானங்களையும் கொணர்ந்து நிறைவேற்றினர்கள். சபையைச் சார்ந்த **பாகம் பிரியாள் மாதர் கழகத்தின்** 32-ஆம் ஆண்டு விழாவும் 29-5-60 அன்று நன்கினிது வழக்கம்போற் சிறப்புற நடைபெற்றது.

**திருஞானசம்பந்தர் திருநாள் :** நமது சமாஜச் சார்பில் திருமயிலைக் கபாலீச்சரத்தில் 12-6-60 ஞாயிறன்று மாலை சிறப்புறக் கொண்டாடப்பெறும். திருவாளர்கள் அ. சோமசுந்தரம் செட்டியார், நல். முருகேச முதலியார், சைவப்பெரியார் சச்சிதானந்தம்பிள்ளை, புலவர் முருகவேள், வித்துவான் அம்பை சங்கரனர் ஆகியோர்கள் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றுவர்.

## புத்தக விலைப்பட்டி

| | | ரூ. | நபை. |
|---|---|---|---|
| பெரிய புராணம் | ... | 3 | 00 |
| திருப்போரூர்ச் சந்நிதிமுறை | ... | 0 | 75 |
| திருவெம்பாவை - திருப்பள்ளியெழுச்சி - சமாஜப் பொன்விழா வெளியீடு | ... | 1 | 00 |
| சமாஜப் பொன்விழா மலர் | ... | 0 | 50 |
| முருகன் மூந்நூல் உரையுடன் | ... | 0 | 40 |
| ஞானியார் அடிகள் நினைவு மலர் | ... | 2 | 00 |
| சிவஞான போத (எளிய உரை) | ... | 0 | 12 |
| குகார்ச்சனைத் திருமந்திரம் | ... | 0 | 06 |
| அறுபத்துமூவர் | ... | 0 | 06 |

தபாற்கூலி, பதிவுச் செலவு வேறு.

| | | | |
|---|---|---|---|
| திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி(உரையுடன்) | | 0 | 06 |
| „ நூறு பிரதிகள் பதிவுத் தபாற்கூலியுள்பட | ... | 7 | 50 |

**சைவ சித்தாந்த மகா சமாஜப் புத்தக விற்பனை அலுவலகம்,**
14, வாரன்ரோடு, மயிலாப்பூர், சென்னை-4.

Printed at the Sadhu Press, 15. Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14. Warren Road, Mylapore, Madras-4.